AL/2020/53/T-I (NEW)



නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

නර්තනය (භරත) I
நாட்டியம் (பரதம்) I
Dancing (Baratha) I

53 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
*Two hours*



**அறிவுறுத்தல்கள் :**

- ✻ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
- ✻ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
- ✻ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
- ✻ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** "குட முழவச்சதி வழியே அனல் கையேந்தி கூத்தாட வல்ல குழகனாகி..." என்னும் தேவாரப் பாடலடி மூலம் குறிப்பிடப்படும் இறைவன்
(1) விநாயகர் (2) நடராஜர் (3) மகாவிஷ்ணு (4) முருகன் (5) பைரவர்

**2.** நிலையற்ற தன்மையுடைய பாவம்
(1) விபாவம் (2) அனுபாவம் (3) ஸ்தாயிபாவம் (4) சஞ்சாரிபாவம் (5) சாத்வீகபாவம்

**3.** அஷ்டவித நாயகிகளுள் குறித்த நேரத்தில் நாயகன் வராமையால் விரகதாபத்தால் கலங்குபவள்
(1) விரஹோத் கண்டிதா (2) கலகாந்தரிதா (3) புரோஷிதபர்த்துகா
(4) வாசகஸஜ்ஜிதா (5) அபிசாரிகா

**4.** 'மோகினி விலாசக் குறவஞ்சியை' சமஸ்கிருதத்தில் எழுதியவர்
(1) இரண்டாம் சகோஜி (2) முத்துக் கவிராயர் (3) திரிகூடராசப்ப கவிராயர்
(4) சகாஜி (5) சப்தரிசி

**5.** ஒலியமைப்பில் போர் தொடங்குவதை சித்திரிக்கப் பயன்படுத்தும் குறியீடு
(1) மகுடி ஓசை (2) மணி ஓசை (3) பறையொலி
(4) நையாண்டி மேளம் (5) ஆந்தை அலறல்

**6.** நடராஜ திருவுருவத் தத்துவத்தில் விருப்பு வெறுப்பற்ற தன்மையைக் குறிப்பது
(1) எருக்கு (2) ஊமத்த மலர் (3) அறுகு (4) கொன்றைமலர் (5) தாழம்பூ

**7.** நவசந்தி நாட்டியங்களுள் **இடம்பெறாதது**
(1) விஸ்ணுக்ராந்தம் (2) சந்தியா நிருத்தம் (3) தண்டபாதம்
(4) புஜங்க லலிதம் (5) மண்டலம்

**8.** இறைவனைத் தோழனாகக் கருதி வழிபடும் பக்தி
(1) மதுர பக்தியாகும். (2) லாவண்ய பக்தியாகும். (3) மூர்க்க பக்தியாகும்.
(4) சாக்கிய பக்தியாகும். (5) வாத்சல்ய பக்தியாகும்.

**9.** 'மிஸ்ரஜாதி மட்டிய தாளம் சங்கீர்ண கதி' அடையும்போது எடுத்துக்கொள்ளும் எண்ணிக்கை
(1) 48 (2) 64 (3) 84 (4) 108 (5) 144

[பக். 2 ஐப் பார்க்க

**10.** கண்டிய நடனத்தில் பாம்பின் அசைவுகளைப் பிரதிபலிக்கும் வண்ணமாக அமைவது
(1) வைரோடி (2) சவுளா (3) நையடி (4) அஸத்துருஸ (5) ஈரடி

**11.** கிராமியக் கலைகளில் ஒன்றான வாசாப்பு கூத்தினை நிகழ்த்தும் பிரதேசம்
(1) மட்டக்களப்பு (2) மன்னார் (3) மலையகம் (4) யாழ்ப்பாணம் (5) முல்லைத்தீவு

**12.** விஜயநகரத்து இளவரசனான குமாரகம்பணன் நடனமாதர்களை ஆதரித்தான் என்பதைக் குறிப்பிடுவது
(1) வால்மீகி சரித்திரம் (2) சதுர்தண்டி பிரகாசிகா (3) ராஜகோபால விலாசம்
(4) உஷாபரிணயம் (5) மதுரா விஜயம்

**13.** 'லுடிதம் லோலிதம்' எனும் சாரி பேதத்தில் பிரயோகிக்கப்படும் அடவு
(1) முதலாவது மண்டியடவு (2) முதலாவது தத்தெய்தாம் அடவு
(3) இரண்டாவது குதித்து மெட்டடவு (4) மூன்றாவது தாதெய்தெய்த அடவு
(5) ஐந்தாவது நாட்டடவு

**14.** சுவாமி விபுலானந்த அழகியற் கற்கைகள் நிறுவகத்தை ஆரம்பித்தவர்
(1) செல்லையா இராசதுரை (2) சுவாமி விபுலானந்தர்
(3) சேர் பொன். இராமநாதன் (4) சு. நடேசபிள்ளை
(5) கலாநிதி ஆனந்தகுமாரசாமி

**15.** குமாரஸ்வாமி நட்டுவனாரின் மூத்த குமாரர்
(1) சுப்பராய நட்டுவனார் (2) கந்தப்ப நட்டுவனார் (3) அருணாசல நட்டுவனார்
(4) கங்கைமுத்து நட்டுவனார் (5) கிருஷ்ண நட்டுவனார்

**16.** நாட்டிய சாஸ்திரத்தில் நாட்டியம் வெற்றி பெறுவதற்குரிய விடயங்களைக் கூறுவது
(1) ஆறாவது அத்தியாயம் (2) பத்தாவது அத்தியாயம் (3) இருபதாவது அத்தியாயம்
(4) இருபத்தேழாவது அத்தியாயம் (5) முப்பதாவது அத்தியாயம்

**17.** சங்க கால ஆடலில் 'உண்டாட்டு' எனும் ஆடல் வகையைக் குறிப்பிடும் நூல்
(1) பட்டினப்பாலை (2) சிறுபாணாற்றுப்படை (3) தொல்காப்பியம்
(4) மதுரைக்காஞ்சி (5) குறுந்தொகை

**18.** பொம்மலாட்டத்தில் கையுறைப் பொம்மைகளைப் பயன்படுத்தும் பிரதேசங்கள்
(1) ஆந்திரா, கேரளா (2) ஒரிஸா, வங்காளம் (3) உத்தரபிரதேசம், தமிழ்நாடு
(4) பெங்களூர், மகாராஸ்டிரா (5) உத்தரபிரதேசம், கேரளா

**19.** தாள அங்கக் குறியீட்டில் ' ◡ ' என்பதால் குறிக்கப்படுவது
(1) லகு (2) அனுத்ருதம் (3) த்ருதம் (4) காகபாதம் (5) புளுதம்

**20.** கண்டிய நடனத்தில் இடம்பெறும் சுத்த நிருத்தப் பகுதிகளுள் ஒன்று
(1) யக்ஹனும (2) யக்கம (3) ஆவந்தும (4) குருகேமாலவ (5) துனுமாலக்புவ

**21.** சங்கமருவிய காலத்தில் பதினொரு வகை ஆடல்களில் காமன் ஆடியது
(1) மரக்கால் (2) குடமாடல் (3) அல்லியம் (4) பேடி (5) பாவை

**22.** ஹாஸ்ய இரஸத்திற்குப் பொருத்தமான இராகங்களை மாத்திரம் கொண்ட தொகுதி எது?
(1) நாதநாமக்கிரியை, சாமா (2) மோகனம், கேதாரம்
(3) ஆஹிரி, புன்னாகவராளி (4) கானடா, மோகனம்
(5) ஆரபடி, கேதாரம்

**23.** காதலனைப் பற்றிக் குறிப்பிடுகையில் காதலனுடைய எண்ணத்தில் லயிக்கும் சம்போக சிருங்கார செய்கை
(1) மோட்டாயிதம் (2) சிலாச (3) குட்டமிதம் (4) லீலா (5) விப்ரகம்

**24.** சோழர் கால ஆடல் மரபில் 'மாராயன்' என அழைக்கப்பட்டவர்கள்
(1) தளியிலார் (2) தலைக்கோலிகள் (3) பதியிலார்
(4) தளிர்ச்சேரிப்பெண்டுகள் (5) நட்டுவனார்



[பக். 3 ஐப் பார்க்க

**25.** தரிகிடதொம், கிடதகதரிகிடதொம், தக்கிடதகதரிகிடதொம், கிடதகதரிகிடதொம், தரிகிடதொம் எனும் முடிவுத் தீர்மானம் அமைந்துள்ள யதி அமைப்பு
(1) மிருதங்கம் (2) கோபுச்ச (3) ஸ்ரோதோவக (4) டமருகம் (5) விசம

**26.** நாயகனிடத்தில் கோபம் கொண்ட நாயகியைச் சமாதானம் செய்வதில் கைதேர்ந்த தூதர்
(1) விடன் (2) சகா (3) பீடமர்த்தன் (4) விதூஷகன் (5) சேடன்

**27.** "தெருவில் வாரானோ என்னை சற்றே திரும்பிப் பாரானோ..." என்பது
(1) கீர்த்தனம் (2) பதம் (3) பதவர்ணம் (4) அஷ்டபதி (5) ஜாவளி

**28.** தகதிமி தகதிமி தகதிமி தகதகி/டததிங்கி ணதொம்ததிங்/கிணதொம்த திங்கிணதொம்// இங்கு குறிப்பிடப்பட்டுள்ள தாளாங்கத்தில் ததிங்கிணதொம் அமைந்துள்ள ஜாதி
(1) திஸ்ரம் (2) சதுஸ்ரம் (3) சங்கீர்ணம் (4) கண்டம் (5) மிஸ்ரம்

**29.** தாளதசப் பிராணன்களில் வரும் மார்க்கத்தில் 'ஷட்' மார்க்கம் என்பது
(1) மூன்று (2) நான்கு (3) ஆறு (4) ஏழு (5) ஒன்பது

**30.** நாடக அரங்க வகைகளில் விகிருதம் என்பது
(1) முக்கோணம் (2) சதுரம் (3) வட்டம் (4) நீள்வட்டம் (5) செவ்வகம்

**31.** தஞ்சைப் பிரகதீஸ்வரர் ஆலயத்தில் ராஜமோகினி என்ற பாத்திரத்தை ஏழு ஆண்டுகள் தொடர்ந்து ஆடி அபிநயித்தவர்
(1) பந்தணைநல்லூர் மீனாட்சி சுந்தரம்பிள்ளை
(2) தஞ்சாவூர் சுப்பராய நட்டுவனார்
(3) பந்தணைநல்லூர் சபாரஞ்சிதம்
(4) அபிநய அரசி பாலசரஸ்வதி
(5) கலைமாமணி ஸ்ரீமதி ருக்மணி அருண்டேல்

**32.** வீர இரஸத்தில் தர்ம வீரனுக்கு உதாரணமாக விளங்கும் நாயகன்
(1) ஸ்ரீ இராமர் (2) சித்தார்த்தன் (3) அர்ச்சுனன்
(4) சிபிச்சக்கரவர்த்தி (5) கர்ணன்

**33.** பரதநாட்டிய ஆடையமைப்புத் தெரிவின்போது கருத்திற்கொள்ளவேண்டிய விடயம்
(1) கண்ணைப் பறிக்கும் ஜரிகை கொண்டதாக இருத்தல்
(2) கறுப்பு நிறத்தினருக்கு கடும் வர்ணங்களைத் தெரிவுசெய்தல்
(3) அரங்கின் பின் திரைக்கு ஒத்த நிறமாக இருத்தல்
(4) வயது, நிறம், உயரம் என்பவற்றுக்கேற்ப தெரிவுசெய்தல்
(5) வெள்ளை நிறத்தினர்க்கு வெளிர் நிறத்தைத் தெரிவுசெய்தல்

**34.** இலங்கை ஜனாதிபதியால் 'கலாகீர்த்தி' எனும் உயரிய விருது வழங்கி கௌரவிக்கப்பட்ட யாழ்ப்பாணத்து பரதநாட்டியக் கலைஞர்
(1) ஞானா குலேந்திரன்
(2) சாந்தினி சிவனேசன்
(3) கிருஷாந்தி இரவீந்திரா
(4) யசோதரா விவேகானந்தா
(5) பத்மினி செல்வேந்திரகுமார்

**35.** சோழர் கால 'திருவெண்காட்டு சுவேதாரண்யேசுவரத்துக் கல்வெட்டு' குறிப்பிடும் ஆடல் வகை
(1) அகமார்க்க நட்டுவம்
(2) சாந்திக்கூத்து
(3) அபிநயக்கூத்து நாடகம்
(4) சொக்கம்
(5) வைகறை ஆட்டங்கள்

**36.** பயானக இரஸத்தின் அனுபாவங்களாக மாத்திரம் விளங்குபவை
(1) வீரம், கைகால் நடுக்கம், ஒளித்தல்
(2) கோபம், வஞ்சனை, கண்களைப் பெரிதாக்கி முழித்தல்
(3) கைகால் நடுக்கம், ஒளித்தல், ஒடுங்குதல்
(4) கண்ணீர்விடல், ஒளித்தல், வஞ்சனை
(5) உதடுகளைக் கடித்தல், கண்களைப் பெரிதாக்கி முழித்தல், வஞ்சனை

[பக். 4 ஐப் பார்க்க

**37.** நாயகியிடத்தில் அவளது நாயகனைப் பற்றி சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு வினயமாகப் பேசி பொழுதுபோக்குபவள்
(1) பிராதிவேசினி (2) சில்பினி (3) சேடி (4) சகி (5) தூதி

**38.** பெண்களுக்கான சிபிதாங்கா, ஸ்புகிதாங்கா ஆகிய லாஸ்ய அம்சங்களைக் கொண்ட சாஸ்திரிய நடனம்
(1) ஒடிசி (2) மோகினியாட்டம் (3) கதகளி
(4) மணிப்புரி (5) கதக்

**39.** சிதம்பரத்தில் 'பேரம்பலம்' என அழைக்கப்படும் சபை
(1) நிருத்தசபை (2) தேவசபை (3) ராஜசபை (4) கனகசபை (5) சிற்சபை

**40.** "ஜெய கௌரி மணாளா தயாளா ..." எனத் தொடங்கும் கீர்த்தனையைப் பாடியவர்
(1) கலாநிதி ஆனந்தகுமாரசாமி (2) நவாலியூர் சோமசுந்தரப்புலவர்
(3) ஊத்துக்காடு வெங்கடசுப்பையர் (4) கனம் கிருஷ்ணய்யர்
(5) பிரம்மஸ்ரீ ந. வீரமணி ஐயர்

- **41** தொடக்கம் **45** வரையான வினாக்களுக்கு பின்வரும் அட்டவணையைப் பயன்படுத்தி மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

| அபிநயம் | வேறுபெயர் | செயற்பாடு | பிரிவு | உட்பிரிவு |
|---|---|---|---|---|
| ஆங்கிக | சாயி | உடல் உறுப்புக்களால் வெளிப்படுத்துவது | i. சூசிகாபிநயம்<br>ii. பாவாபிநயம்<br>iii. தொந்தாபிநயம்<br>iv. இலட்சணிகாபிநயம் | A |
| B | சஞ்சாயி | வார்த்தைகளால் வெளிப்படுத்துவது | i. சுகீத வாசிகம்<br>ii. உபகீத வாசிகம்<br>iii. சுசப்த வாசிகம்<br>iv. உபசப்த வாசிகம் | i. ஆதிபாஷை<br>ii. ஆர்ய பாஷை<br>iii. ஜாதி பாஷை<br>iv. யூன்யந்திரி பாஷை |
| ஆஹார்ய | C | அலங்கரிக்கும் அலங்காரங்களால் வெளிப்படுத்துவது | D | i. புஷ்டம்<br>ii. அலங்காரம்<br>iii. அங்கரச்சனம்<br>iv. சஞ்சீவம் |
| சாத்வீக | விபசாயி | E | i. சாட்சுஷியம்<br>ii. வியஞ்சகம் | i. ஸ்தம்பம்<br>ii. பிரளயம்<br>iii. ரோமாஞ்சம்<br>iv. ஸ்வேத |

**41.** A இல் இடம்பெறவேண்டிய அபிநயத்தின் உட்பிரிவு எது?
(1) சுத்த, அசுத்த, அதியந்த
(2) அங்கம், உபாங்கம், பிரதியங்கம்
(3) புஷ்டம், அலங்காரம், அங்கரச்சனம்
(4) அங்கம், புஷ்டம், அசுத்த
(5) பிரத்தியங்கம், புஷ்டம், அலங்காரம்

**42.** B இல் இடம்பெறவேண்டிய அபிநயம்
(1) ஆங்கிக (2) பாவிக (3) நிஜாகார்ய (4) ஆவாக்கிய (5) வாசிக

**43.** C இல் இடம்பெறவேண்டிய அபிநயத்தின் வேறு பெயர்
(1) ஸ்தாயி (2) வியபிசாரி (3) அனுசாயி (4) சஞ்சாயி (5) சாயி

[பக். 5 ஐப் பார்க்க

**44.** D இல் இடம்பெறவேண்டிய அபிநயத்தின் பிரிவு
(1) சூசிகா, சுகீதவாசிகம், ஸ்தம்பம்
(2) அஸ்ரு, வைஸ்வர்ய, ஸ்வேத
(3) அபிசாரி, பிரயளம், ரோமாஞ்சம்
(4) நிஜாகார்ய, அபிசாரி, விபசாயி
(5) விபசாயி, அஸ்ரு, ஸ்வேத

**45.** E இல் இடம்பெறவேண்டிய அபிநயச் செயற்பாடு
(1) உடல் உறுப்புக்களால் வெளிப்படுத்தப்படுவது
(2) உடல் உறுப்புக்களாலும், வார்த்தைகளாலும் வெளிப்படுத்துவது
(3) சாத்வீக உணர்வுகளால் வெளிப்படுத்துவது
(4) அலங்காரங்களால் வெளிப்படுத்துவது
(5) வார்த்தைகளாலும் சாத்வீக உணர்வுகளாலும் வெளிப்படுத்துவது

**46.** இங்கு படத்தில் காட்டப்பட்டுள்ள இசைக்கருவியின் பெயர் யாது?



(1) தாளம்
(2) சேமக்கலம்
(3) சல்லாரி
(4) உடுக்கு
(5) தப்பு

**47.** இப்படத்தில் காட்டப்பட்டுள்ள நாட்டியக் கலைஞர் யார்?



(1) பிரம்மஸ்ரீ வீரமணி ஐயர்
(2) கீதாஞ்சலி வி. கே. நல்லையா
(3) க. தொம்மக்குட்டி
(4) ந. இராசரத்தினம்
(5) கலைச்செல்வன் ஏரம்பு சுப்பையா

**48.** இப்படத்தில் காட்டப்பட்டுள்ள பரதநாட்டிய அணிகலன்கள் முறையே,



(1) சூரிய, சந்திர பிறை என்பனவாகும்.
(2) சிமிக்கி, காதுமாட்டி என்பனவாகும்.
(3) நத்து, காதுமாட்டி என்பனவாகும்.
(4) இராக்கொடி, சிமிக்கி என்பனவாகும்.
(5) உச்சிவரி, காதுமாட்டி என்பனவாகும்.



[பக். 6 ஐப் பார்க்க

**49.** இப்படத்தில் வெளிப்படுத்தப்பட்டிருக்கும் சாஸ்திரிய நடனம் எது?

(1) கதகளி

(2) ஒடிசி

(3) குச்சுப்புடி

(4) மணிப்புரி

(5) மோகினியாட்டம்



**50.** இப்படத்தில் காட்டப்பட்டுள்ள கிராமிய நடனம் யாது?

(1) கரகாட்டம்

(2) காவடியாட்டம்

(3) கோலாட்டம்

(4) பொம்மலாட்டம்

(5) ஒயிலாட்டம்



❊ ❊ ❊

(නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus)

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

| | |
|---|---|
| නර්තනය (භරත) | II |
| நாட்டியம் (பரதம்) | II |
| Dancing (Baratha) | II |

53 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

| | | |
|---|---|---|
| අමතර කියවීම් කාලය | - | මිනිත්තු 10 යි |
| மேலதிக வாசிப்பு நேரம் | - | 10 நிமிடங்கள் |
| Additional Reading Time | - | 10 minutes |

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**அறிவுறுத்தல்கள் :**

※ பகுதி I இல் முதலாம் வினா உட்பட **இரண்டு** வினாக்களையும் பகுதி II இல் எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

## பகுதி I

**1.** நீர் கற்ற பதவர்ணத்தின்,

(i) இராகம், தாளம் என்பவற்றைத் தருக. (02 புள்ளிகள்)

(ii) பாடலை எழுதியவர், நாட்டிய அமைப்புச் செய்தவர் ஆகியோரின் பெயர்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) இரண்டாவது சரணஸ்வரக் கோர்வையினைத் தாள அங்கக் குறியீடுகளுடன் எழுதுக. (06 புள்ளிகள்)

(iv) இரண்டாவது தீர்மானத்தினை தாள அங்கக் குறியீடுகளுடன் எழுதுக. (10 புள்ளிகள்)

**2.** யக்ஷகானத்தின்,

(i) தோற்றம், வளர்ச்சி என்பன பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(ii) பக்கவாத்தியங்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) ஆடல்முறைகளை விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iv) ஒப்பனைகள் பற்றி விளக்குக. (08 புள்ளிகள்)

**3.** சிருங்கார நாயகியாகிய,

(i) ஸ்வியா நாயகியின் இலட்சணங்களை விவரிக்குக. (02 புள்ளிகள்)

(ii) பரகீயா நாயகியின் இலட்சணங்களை விவரிக்குக. (02 புள்ளிகள்)

(iii) ஸ்வியா நாயகியின் வகைகள் ஒவ்வொன்றையும் தனித்தனியே விளக்குக. (08 புள்ளிகள்)

(iv) பரகீயா நாயகியின் வகைகள் ஒவ்வொன்றையும் தனித்தனியே விளக்குக. (08 புள்ளிகள்)



[பக். 2 ஐப் பார்க்க

## பகுதி II

**4.** (i) ஒயிலாட்டம் பற்றி விவரிக்குக. (06 புள்ளிகள்)

(ii) குதிரையாட்டத்தின் ஆடல் முறைகளை விளக்குக. (07 புள்ளிகள்)

(iii) பொம்மலாட்டத்தின் ஆடல் வகைகளைக் குறிப்பிட்டு, அவை ஒவ்வொன்றையும் விளக்குக. (07 புள்ளிகள்)

**5.** (i) 'ராஜகோபால விலாசம்' எனும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ள அரசவை நர்த்தகிகள் **நால்வரின்** பெயர்களையும், அவர்கள் நிகழ்த்திய நடன உருப்படிகளையும் தருக. (04 புள்ளிகள்)

(ii) விஜயநகர நாயக்கர் காலத்தில் குறிப்பிடப்படும் **இரு** வகை நடனமாதர்களையும் பெயரிட்டு, அக்கால மக்களின் வாழ்வியலோடு நாட்டியம் இணைந்திருந்தமையினையும் விளக்குக. (08 புள்ளிகள்)

(iii) ஆங்கிலேயர் காலத்தில் நடனக்கலை நலிவடைந்தமைக்கான காரணங்களை விளக்குக.(08 புள்ளிகள்)

**6.** பின்வருவனவற்றிற்கு சிறுகுறிப்பு எழுதுக.

(i) வீர ரஸம்

(ii) வீணை

(iii) கோலம்

(iv) அலாரிப்பு

($5 \times 4 = 20$ புள்ளிகள்)

**7.** பிரம்மஸ்ரீ ந. வீரமணி ஐயர் அவர்கள் இசை, நடனக்கலை வளர்ச்சிக்கு ஆற்றிய பங்களிப்பினை தெளிவுபடுத்துக. (20 புள்ளிகள்)

**8.** (i) குருகுல நடனக் கல்விமுறைக்கும் தற்கால நடனக்கல்வி முறைக்கும் இடையிலான வேறுபாடுகளை விவரிக்குக. (10 புள்ளிகள்)

(ii) "நடன ஆற்றுகைக்கு செய்முறைப் பயிற்சி அவசியம்." இக்கூற்றின் பொருத்தப்பாட்டினை விளக்குக. (10 புள்ளிகள்)

* * *